உ

சிவமயம்

மரகத விநாயகர் துணை



# பட்டினத்தடிகள்

# சரித்திரம்

30-1

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# பட்டினத்தடிகள் சரித்திரம்

இது
கண்டனூர் சிவநேசச் செல்வர்
**நா. நா. அரு. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்கள்**
விருப்பத்தின்படி
காரைக்குடி சிவநேசச் செல்வர்
**சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரால்**
எழுதப்பெற்றது



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த மூர்த்திநாயனர் அருளிச் செய்த

## காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம் தேவாரம்

பண்-தக்கேசி

திருச்சிற்றம்பலம்

அங்கமாறும் வேதநான்கு போதுமயனெடு மால், தங்கணுேடு நேடநின்ற சங்கரன்றங்கு மிடம், வங்கமாரு முத்தமிப்பி வார்கடலூ டலைப்பப், பங்கமில்லார் பயில்புகாரிற் பல்லவ னீச்சரமே. 1

பரசுபாணியர் பாடல் வீணையர் பட்டின
துறை பல்லவனீச்சரத், தாசுபேணி நின்றி
வர் தன்மை யறிவாரார். 2

திருச்சாங்காடு

வானத் திளமதியும் பாம்புந் தன்னில் வளர்
சடைமே லாதரிப்ப வைத்தார் போலுந்,
தேனைத்திளைத்துண்டு வண்டு பாடுந் தில்லை
நடமாடுந் தேவர்போலும், ஞானத்தி ஞெண
சுடராய் நின்றார் போலும் நன்மையுந் திமை
யுமானுர் போலுந், தேஞெந் தடியார்க் கினி
யார் போலுந் திருச்சாய்க்காட் டினிதுறையுஞ்
செல்வர் தாமே 3

நாவுக்கரசர்

## திருவெண்காடு

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே
டுள்ளநினை வாயினவே வரம் பெறுவர் ஐயுற
வேண்டர் வொன்றும்
வேயனதோளுமை பங்கன் வெண்காட்டு முக்
குள்நீர்
தோய்வினை யாரவர்தம்மைந் தோயாவாம்
தீவிசனமே
—சம்பந்தர்.

உ

சிவமயம்

மரகத விநாயகர் துணை

## பட்டினத்தடிகள்.

உலகெல்லாம் போற்றி எற்றற்குறிய உத்தமப் பெரியார். பண்டைநாள் கயிலை மலையில் உமையோர் பாகத்திறை சிவபெருமானுக்குத் தோழராம் குபேர பதவியிலிருந்தவர் ஒருநாள் கண்ணுதல் கருணை கூர்ந்து தேவர்களும் முனிவர்களும் புடைசூழப் புட்பக விமானத்தில் உலகுபுகழ்சிதம்பரம் நோக்கி எழுந்தருளினார் தோழராம் குபேரனும் உடன் வந்தார் உடன் வந்த குபேரனார் தில்லைத் திரு நடனம் தெரிசித்த ஆனந்தமேலிட்டால் பல தலங்களும் பணிய விருப்புற்றார். விருப்பிற்கிணங்கிய விமலனார் குபேரனுக்குப் பல க்ஷேத்திரங்களையும் பணிவித்துத் திருவெண்காட்டிற்கு வந்தருளினார். உடன் வந்த குபேரனும் திருவெண்காடு தெரிசித்து மகிழ்வுற்றார் மகிழ்வுற்ற குபேரன் உடனே பொன்னியாற்றின் நந்நீர் பெருங்கால்

வளப்பம் மிக்க காவிரிப்பூம்பட்டினத்தை பார்வையிட்ட குபேரன் உளமிக்க காதலும் கொண்டான். காதல் கொண்ட குபேரன் இறைவனிடத்தில் விண்ணப்பித்துக் கொள் கிருர். சுவாமி ! பல்விளங்களும் சிறந்த் புண்ணிய பூமியாகிய அருகாமையிலுள்ள புகார் நகரத்தில் சில நாள் வதிய ஆவலுற் றேன். அனுக்கிரகிக்க வேண்டுமென்ருர். வேண்டுவார் வேண்டுவதே ஈயவல்ல வேதிய ஞர், அன்பனே! இது கர்மபூமியானதால் மானுட வடிவத்துடன் வாழக்கடவை என்று கட்டளை இட்டருளினர் கட்டளை பெற்ற குபேரன் மானுடனுய்ப்பிறந்து செல்வமுற்றுச் செறுக்கால் மயங்கையி ் தாம் புதல்வராய் என்னை ஆட்கொள்ள வேண்டு மென்று அடி பணிந்து கேட்டுக் கொண்டார் அதற்கும அம்மையப்பர் கிருபை செய்து கயிலை சென்றருளினர். காதல் கொண்ட குபோன் காவிரிப்பூம்பட்டினத்தில் மகவாய்ப் பிறந்தார் இவருடைய தந்தையார் வணிகர் குலதிலகர் சிவநேசச் செட்டியார்; தாயார் கற்பின் மிக்க பொற்பமர் செல்வி ஞான கலாம்பிகை. இவர்கள்இல்லறம் விளங்க மகவய்த் தோன்றி

னர். குபேரராம் நமது பட்டினத்தடிகள் இவருக்குப் பெற்றோர்கள் திருவெண்காடர் என்று பெயரிட்டார்கள். திருவெண்காடரும் உலகவர் உளமகிழத் தாய்தந்தை மனமுவக்க நலனெலால் பொலிய வளர்ந்து வந்தார். ஐந்தாண்டு நிறைவு பெற்றது. தந்தையார் சிவநேசச் செட்டியாரும் விதிவழி நாள் முடிந்தமையால் சிவபதமடைந்தார் சிவபத மடைந்த தந்தையாருக்குகுலமுறைப்படி ஈமக் கடன் வழுவிலாது திருவெண்காடர் செய்து முடித்தார், கணவரைப் பிரிந்த ஞானகலாம் பிகையார் கவலை மீதூருங்காலத்து தங்கள் இளங்குமாரனாகிய திருவெண்காடரின் முகம் பார்த்துக் கவலை நீங்கினார்கள் தந்தையைப் பிரிந்த வெண்காடரும் மிகுந்த மதிநுட் பத்துடன் பலகலையும் பயில்வார் போல் பயிறாருசகல கலையும் நிறையப் பெற்று அறிவின் செல்வராய் விளங்கினார் கற்றதனால் ஆய பயன் வாலறிவன் நற்றாள் தொழல்என்றும் மனப் பான்மை வெண்காடரிடத்தில் விளக்க முற்றது வாலறிவன் நற்றாள்தொழவழியாகும் சிவதீக்ஷா முறைப்படி சிவபூஜை செய்ய விருப்புற்றார்,

அப்பெரு விருப்பினை அறிந்து தாயாரும் முறை வழுவாது ஈசற்குவந்த பூசனை புரிய புதல்வர்க்கு பருவம் போதாதெனக் கருதிச் சிறிது நாள் கிரமித்துச் செய்து கொள்ளலா மென்று கூறினார்கள். அருமைத் தாயார் கூறியும் சிவபூஜை செய்யவேண்டு மென்ற விருப்பம் மிக்கவராய் உணவாதியாவும் வெறுக்க உடலும் மெலிந்து சிவபூஜையிலே சிந்தை வைத்துயிலா நின்றார். துயில்வுற்ற வெண்காடர் கனவில் ஈசுவரன் தோன்றி அன்பனே! உனது விருப்பின்படி திருவெண் காட்டிற்குச்செல்;அதற்குஉரிய சிவாச்சாரியர் வருவார்; தீக்ஷைபெற்று நாமுவக்கும் பூசனை புரிவாயாக. என்று ஆசிகூறி ஆசிகூறு அனுக் கிரகித்தார் அனுக்கிரகம் பெற்ற வெண்காடர் தாயாருடன் சிவபூஜை அடியார் பூஜைக்கு வேண்டிய சகலவித திரவியங்களுடனும் திரு வெண்காடு வந்தார் அம்மையப்பரை வணங்கி அபிடேக ஆராதனை, அடியார் பூஜை செய்து தீக்ஷா குருவின் வரவு நோக்கித்தவம் செய்து வந்தார். தவநிலை கண்டமதவாணர் வியாக்கிரம புரத்தில் ஓர் உத்த சிவாசாரியர் கனவில் தோன்றி நீ நாளை உதயம் சுவேதனம் சென்றுதிருவெண்காடரெனும்சிவபூஜைஆர்வ

மிக்க சிறுவனுக்குசைவ தீக்ஷைசெய்வித்து பஞ்சாக்ஷர உபதேசஞ் செய்து அவனால் முற்பிறப்பில் பூஜிக்கப்பெற்ற ஆன்மார்த்த சிவலிங்க மூர்த்தியடங்கிய ஒருவராலும் திறக்கப்படாத இச்சம்புடத்தை அவனுக்குக் கொடுத்து ஒரு மண்டலம் உடனிருந்து பூஜையும் சிறப்பாக முடித்து வைப்பாய்! நாமிருப்பதும் திருவிடைமருதூர் என்று கூறிமறைந்தருளினார். குருமூர்த்தியாக வந்த சிவசாரியாரும் வெண்காடருக்கு தீக்ஷைக்குரியபக்குவ காலங்கண்டார். காவிரி நதிக்கு அழைத்துச் சென்றார் சைவ தீக்ஷாசங்கற்ப ஸ்நானம் செய்துவைத்து விபூதி ருத்ராக்ஷதாரணம் செய்து சிவசந்நிதிச்கு அழைத்து .வந்தார்.

திருவெண்காட்டிறைவர் திருச்சந்நிதியில் வேதத்தின் உட்பொருளால் வேத ம~~த்தியில்~~ மிளரும் மேன்மைமிக்க ஸ்ரீபஞ்சாக்ஷர உபதேசம செய்து வைத்தார். இறைவன் கொடுத்த சம்புடத்தையும் எதிரில் வைத்துப் போற்றி அங்குள்ள அத்தணர்களெல்லாரும் திறந்தார்கள் திறக்கமுடியவில்லை. வேதவனத்தில் நாவரசர் மறைக்கதவும் திறந்தது போல்

திருவெண்காடர் சம்புடத்தைப் பூ ஜி த் து த் திறந்ததும் லெகுவாகக் கைபட்டதும் திறந்து விட்டது. அச் சம்புடத்தில் தேவலோகத்துப் புஷ்பங்களால் அர்ச்சிக்கப் பெற்ற பிரகாசம் பொருந்திய சிவலிங்கமும் விநாயகமூர்த்தியும் விளங்கினர்கள் கண்டோரனை வரும் போற்றி ஏற்றினர்கள். திருவெண்காடரும் ஆராத காதலுடன் குரு வாக்கியப்படி ஆன்மார்த்த சிவலிங்கபூஜை செய்து கொண்டார். அம்மை அப்பருக்கும் ருத்ராபிடேகமும் விசேஷ பூஜை மகேசுர பூஜையும் சிறப்பாக நடைபெற்றது. பிறகு குரு தெக்ஷிணைக்கும் உரிய பெரும் பொருளில்லாது தாயும் வெண்காடரும் வேண்ட இறைவனருளால், புகார் நகரில் வெண்காடர் மாளிகையில் குபேர சம்பத்துக்கள் யாவும் நிறையக் குவிந்தன.

அது கேட்ட தாயும சேயும் அளவு கடந்த ஆனந்தமுற்றுர்கள் அப்பொருள் கொணர்ந்து தீக்ஷா குருதெக்ஷிணையை உலகவர் வியக்க மகிழ்ச்சியுடன் கொடுத்து குருவின் ஆசீர் வாதம் பெற்றுர்கள். பிறகு சில நாள் திருவெண் காட்டிலு மிருந்து நியமம் தவருது

முக்குள நீராடித் தூய நீறு நிறையப் பூசிக் கசிந்து கண்ணீர் மல்க ஐந்தெழுத்தோதி உலகமாதாவாகிய காமாக்ஷி அம்மையார், உலகமக்கள் யாவரும் பிறவிப் பயன் பெற்று உய்யக் கருதி உலக நாயகராகிய ஏகாம்பர நாதனே பூஜித்த சிறப்பை தெய்வக் கவி சேக்கிழார் பெருமான் —

'' கரந்தரும் பயனிது வென உணர்ந்து
கம்பமேவிய உம்பர் நாயகர் பால்
நிரந்தகாதல் செய் உள்ளத்தளாகி
நீடு நன்மைகள் யாவையும் பெருக
வரந்தரும் பொருளாம் மலைவல்லி
மாரிலா வகை மலர்ந்த பேரன்பால்
சிரம் பணிந் தெழுபூஜை நாடோரும்
திரு உளங்கொளப் பெருகியதன்றே''

— என்ற திருவாக்கின்படி நம் திருவெண்காடர் அரும்பொடு மலர் கைக்கொண்டு ஆராத காதலோடு சிவலிங்க பூஜைசெய்து கொண்டிருந்தார்.

## திருமணம்

பிறகு ஆர்வத்துடன் சிறப்புற்ற வெண் காடருக்கு மணத்திற்குரிய பருவம் வந்தது கண்ட தாயார் உள்ளூரிலே வைசிய குலத்தில் செல்வம், கல்வி, அறிவு ஒழுக்கங்களிற்சிறந்த சிதம்பரம் செட்டியாருக்கும் அவர் தம் கற்பின் வாழ்க்கை மனைவியார் சிவகாமி அம்மை யாருக்கும் பிறந்த திருவினும் மிக்க நங்கை சிவகலை என்னும் பொற்பமர் செல்வியை மணம்பேசி முடித்தார்கள்.

திருமணமும் குலமுறைப்படி சிறப்பாக நடைபெற்றது. திருமணம் புணர்ந்த சிவகலை செல்வியாருடன் நம் திருவெண்காடரும் கருத் தொருமித்த காதலோடு நல்லறமாகிய இல்லறத்தை எழில்பெற நடத்தினார்கள்.

### மகப்பேறு

இம்முறை பல்லோர் புகழும் நல்லற மாகிய இல்லறம் நடாத்தும் திருவெண் காட ருக்கு யாதும் குறைவில்லையானாலும் 35 வயது வரை புத்திர உற்பத்தி இல்லாதி ருந்தது. ஆகையால் மனையறத்தில் இன்பம்

பயக்கும் மகப் பெறுவான் சிவகலையாருடன் திருவிடைமருதூர்சென்று அராவணிஜடிலத்து அண்ணலார் முன் வேண்டிக் கொண்டார்கள். பிறையாக்கைப் பெரியோனும் வேண்டுவதே ஈய வல்லவருமான சேய் உவக்கும் மருதப் பிரானும் பெருங்க நலை மேலிட்டால், தாமே மகவாய் வந்து திப்போமெனத் திருவுளம் கொண்டு அவ்வூரில் அறம்பல புரிந்த ஆதி சைவ அந்தணர் சிகாமணியாம் சிவசருமர் அவர்தம் கற்பின் மிக்க சுசீலையார் கனவில் தோன்றி அறம் பல புரியச் செல்வம் விரும்பி நிற்கும் அன்புடையீர்! எமது ஆலயத்தில் பூர்வ பாகத்தில் வில்வமர நிழலில் குழந்தை வடிவோடிருப்போம், நீங்களிருவரும் எம்மை எடுத்தேந்திக் கொண்டு காவிரிப்பூம்பட்டினம் செல்லுங்கள் ஆங்கு குபேர சம்பத்துடன் புத்திரனில்லாது நம்மை வேண்டி வாழும் திருவெண்காடருக்கும் அவர் அன்பின் வாழ்க்கை மனைவிக்கும் அவர்தம் மாளிகைப் புறம் பூஞ்சோலையில் எம்மை பிள்ளையாகக் கொடுப்பீர்களாக பிள்ளையைப் பெற்றுக் கொண்ட அவர்களும் பிள்ளை இடைக்குப்

பொன், பெரும் செல்வமாகக் கொடுப்பார்கள் அச்செல்வத்தைப் பெற்று வறுமை தீர்ந்து செழுமை உற்று நல்லறம் புரிவீர்களாக என்று கூறி மறைந்தார். இச்சம்பவத்தை மருத வாணர்புகார் நகர்ச் செல்வர் திருவெண்காடர் அவர் தம் மனை வாழ்க்கை நங்கைக்கும்' இப் பிறப்பில் உங்களுக்கு கருப்பத்தில் மகப் பேறில்லை உங்கள் அன்பாலும், வரத்தாலும் நாமே மகவாக வருகின்றோம்' என கனவிலும் விளக்கமாக நடக்கவிருக்கும் நிகழ்ச்சியை உணர்த்தி யருளினர். திருவருள் உணர்த்த, உணர்ந்த தம்பதிகள் பெரு மகிழ்ச்சியுடன் புதல்வனர் வரவு பார்த்திருந்தார்கள்.

அதேபோல் மறுநாள் காலை பூஜைமுடித்துப் பொலிவுடன் வேண்டும் சந்தியில் மாளிகைப் புறஞ் சோலையில் மகவின் குரல் கேட்டது. யாழினுமினிய குரல் கேட்ட வெண்காடரும், சிவகலையம்மையாரும் விரைந்து பூஞ்சோலை வந்தார்கள். சிவசருமர் சுசீலை அம்மையார் செல்வக் குழந்தையையும் கண்டார்கள். காதன் மக்கூறகை கூப்பி

வணங்கி வாழ்வுற்றேமென்று மகவு வேண்டி நின்றார்கள். மகவு விழைந்த நின்ற சிவகலை அம்மையார் சுசீலையம்மையாரிடம் மருதப் பிராணும் மகவினைப் பெற்று ஈன்றபொழு தினும் பெரிதுவந்து மகிழ்வுற்றார்கள். நன்மகவுபெற்ற வெண்காடர், சிவகலையும், சிவசருமர் சுசீலை தேவிக்கு பிள்ளையின் இடை பொருள் கொடுத்து மகிழ்வித்து ஆசி பெற்று வழியனுப்பினார்கள். நிதியுடன் சென்ற சிவசருமர் சிவபூஜை, பிதுர் பூஜை, அடியவர் பூஜைகளை அன்போடு செய்துவந்தார். அத்துடன் திருவெண்காடர் அன்புடன் தான் பெற்ற திருக்குழந்தையின் உருவப் பொலிவையும் பார்த்து மகிழ்ச்சி அடைந்தார்கள்.

## கடல் விளையாடல்

திருவருளால் திருவெண்காடரும் சிவகலை அம்மையாரும்நலனெலாம்ஒருங்கே அமையப் பெற்ற நல்ல குழந்தையைப் பெற்ற மகிழ்ச் சியுடன் வளர்த்து வந்தார்கள். பிள்ளையும் நலனெலாம் பொலிய வளர்ந்து பெற்றோர்கள் உளங்களிக்கவிளையாடல்செய்ததுவிளையாடல் புரியும் ஒருநாள் மருதவாணக் குழந்தை தமது

தோழர்கட ன் கடற்கரை சென்ருர். சென்றவர் சிறுவர்களுடன் கப்பலில் ஏறி நெடுந்தூரம் போய் நீர் விளையாடல் செய்தார்கள் அப்பொழுது ஒரு பெரு மீன் இவர்கள் படகில் ஏறி ஒரு சிறுவனை விழுங்கியது. விழுங்கியது கண்ட அனைவரும் கூச்சலிட்டார்கள் மருதவாணர் முடி துளக்கி மீனைக்காலால் உதையவே அதன் வயிற்றினின்றும்'' சிந்து முனிவர் சாபத்தால் தொடக்குண்டு மீனுகக் கிடந்த மணிக்கிரீவன் நானே உமது பாத ஸ்பரிசத்தால் விமோசனம் பெற்று வாழ்ந்தேன் என்று வணங்கி விமானத்தில்சென்ருர். மீனுல் விழுங்கப்பட்ட சிறுவனும் மருதவாணர் மந்தகாசத்தால் முத்துக்களையும்ரத்தினங்களையும் கைகொண்டு உயிர் பெற்று மருதவாணர் முன் வணங்கினுன் மற்ற சிறுவர்களும் அந்த மீனிடமாக மருதவாணர் அருளால்நவரத்தினங்களைப் பெற்று புகார் நகரம் வந்தார்கள். மருதவாணரும் சிறுவர்கள் பாத காணிக்கையாகக் கொடுத்த ரத்தினங்களைத் தந்தையார் திருவெண்காடர் மனம் உவக்கக் கொடுத்து மகிழ்வித்தார்.

## கப்பல் யாத்திரை

மருதவாணரும் சமய சாத்திரம் வியாபாரக் கல்வி நுட்பங்கள் கற்றுக் கொண்ட திறமை யுடையவரானபடியால் கடல் கடந்து கப்பல் யாத்திரை செய்து பொருள்தேட தந்தையை வேண்டினுர். தந்தை குழந்தையைப் பிரிய மனமில்லாது தடைசெய்தார். 'வணிகற்கழகு திரைகடல் ஓடித்திரவியம் சேர்ப்பதே, எனக் குழந்தை கூறசிறிது மனந்தேறினுர் தேற்ற முற்ற வெண்காடர் வியாபாரத்திற்கு உரிய சாமான்களையும் பொருளையும் கொடுத்துநல்ல நாளில் கப்பலேற்றிவைத்தார் மருதவாணரும் தீவு திவாந்திரங்கள்சென்றுசிறந்தவியாபாரம் செய்து பெரும் பொருள் சேர்த்தார் பொருளை கோயில் குளம் ஆகிய சிவதருமங்கள் செய்து புண்ணியததையே பொருளாகத் தேடினுர் மற்ற தோழர்கள் நகை செய்து தந்தையார் கோபிப்பாரே என்று குறிப்பாலுணர்த் தினுர்கள் மருதவாணரும் புன்னகைசெய்து, விராட்டி மூட்டைகளை நிறையக் கட்டி சிலவிராட்டிகளில் அரிய ரத்தினங்களை வைத்துக் கர்ய

வைத்து கைப்பெட்டியில் தைத்துப் பூட்டிக் கொண்டார். வியாபாரத்தைமுடித்துக்கொண்டு:தோழர்களுடன் ஊருக்குத்திரும்பினார்கள். வழியில் காற்றும் மழையும் அதிக மேற்படக் கப்பல்கள் ஒதுங்கி கடலில் அதிகதூரம் சென்று விட்டது அதனால் கரை சேர நாள் ஆனதால் நெருப்பு மூட்டவும் குளிருக்கு கூடுதல் காயவும் மருதவாணரிடம் விராட்டியைக் கேட்டார்கள் மருதவாணரும் பெட்டியிலுள்ள விராட்டியை மாதிரி விராட்டியாகக் காட்டி அதேமாதிரி விராட்டியையூர்சென்றதும் தருவதாகச் சீட்டு எழுதி வாங்கிக்கொண்டுகொடுத்தார் சிலநாள் சென்று புகார் நகரம் வந்தார்கள் பெற்றோர்களும் வியாபாரத்திற்கு கடல் கடந்து சென்ற புதல்வர்களை வரவேற்று உபசரித்தார்கள் உடன் சென்ற சில வணிகர்கள் திருவெண்காடரிடம் சென்று உங்கள்மருதவாணர் மதி மயங்கிவிட்டார். பொருள் எல்லாம் செலவாய் விட்டது. என்றார்கள் அது கேட்ட வெண்காடர் மருதவாணர் கொணர்ந்த பொருளைப் பார்த்தார். விராட்டி மூட்டையும் கடலையுமாக இருக்கக்கண்டு இது உண்மை

என்றே கவலையுற்றார். பிறகு சோதித்தநும் கைப்பெட்டியில் விராட்டியும் கைச் சீட்டு களுமிருந்தது. பெட்டியில் விராட்டி இருக் கிறது யோஜக்கற்பாலதெனத் தெளிந்தார். ஒரு விராட்டியை வணிகர்களையும் வைத்துக் கொண்டு புட்டதும் அதிலிருந்து நவரத்தினங் களுமிளிர்ந்தன. அவலும் கடலைகளும் பொன் பணலாகஇருந்ததுஆச்சரியமுற்று அதிசயித்து மருதவாணர் மதிநுட்பத்தையும் வியாபாரத் திறனையும் மெச்சினார்கள் சீட்டுஎழுதி விராட்டி பெற்ற தோழ விபாபாரிகள் ரத்தின முள்ள விராட்டி ''நாம் எப்படி கொடுப்ப' தென்று எண்ணி மருதவாணரின் மதிநுட்பத்தினைப் பாராட்டினார்கள்.

## துறவு பூண்டல்

திருவெண்காடரும், செல்லக் குழந்தை யைக் கண்டு கட்டித் தழுவ விழைந்து வீடு வந்தார் மருதவாணரைக்காணேம் வீட்டில் மனைவியாரிடம் விசாரித்தார். செல்வக் குழந்தை மருதவாணர் உணவுண்டு புறம் சென்றான். எங்களுக்கு ஆடை ஆபரணங்கள்

ருந்துள்ளான் என்ருர்கள் அதுகண்டு சிறிது தெளிவுற்று மகிழ்ந்தார்.

அரும்பெரும் செல்வங் குழந்தை மருத வாணரைத் தேடினுர். காணவில்லை! மருத வாணருக்கு பதிஞராண்டு நிறைவெய்திய படியால் முற்கூறியபடி திருவிடை மருதூர் சென்ருர் சிவபக்தி அடியார் பக்தியில் சிறந்த சிவசருமருக்கும், அவர் பத்தினிக்கும் ஜோதி சொருப தெரிசனம் கொடுத்து சிவபதமளித்து மானிடவடிவமாற்றி சிவலிங்க ரூபமாஞர்.

புதல்வரைக் காணுது திருவெண்காடர் கவலை மீக்கூற உணவின்றி நித்திரையில் இருந்தார் அது கண்ட மனைவியார் ஞாபகம் வரவே, மருதவாணர் கொடுத்துச் சென்ற ஒரு சிறு அழகிய பெட்டியைக் கொண்டு வந்து கொடுத்தார்கள் அதைப் பெற்ருர், ஆனந்த மேலிடத் திறந்து பார்த்தார் அதில் ஒரு காது அற்ற ஊசியும் சீட்டுமிருந்தது. சீட்டைப் படித்துப் பார்த்தார். காதற்ற ஊசியும்வாராது காணும் கடைவழிக்கே என்னும் ஆப்தவாக்கி யம் கண்டார் அது கண்ட திருவெண்காட்டு அடிகளுக்கும் உண்மை ஞானம் உதித்தது.

''நமக்கு புதல்வராக வந்தவர், சிவ பெருமானே,' என்று தெளிந்தார் சிவபெருமானும் மருதவாணர் கடாக்ஷ தீக்ஷயும் உபதேச வாக்கியமும் உறுதுணையாக உலகப்பற்றொழிந்து உண்மைத் துறவியானார் துறவறம்பூண்ட திருவெண்காடர் செல்வம் அனைத்தும் துறந்தார் அருமைத்தாயார் ஞானகலாம்பிகைக்குத் வேர்தல்சொல்லிஇறந்தகாலத்தில்குடியிருந்த வீடு கொள்ளி வைப்பேன்''என்று உறுதிகூறி விடைபெற்றுக் கொண்டார் கருத்தொரு மித்த காதல் மிக்க சிவகலையாரும் பின்தொடர்ந்தனர்' பின் தொடர்வது பெண்பாலாகிய உனக்குப் பொருந்தாது சிவ வழிபாடாகிய நற்கருமம் செய்வாயாக என்று கட்டளைஇட்டார் தனது பொக்கிஷதாரகிய சேந்தனுருக்கும் தனது பொருளனைத்தும் ஏழைகளுக்கு உதவுமாறு சூரை இடும்படி அனுமதி கொடுத்தார் ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கு நிலை பெற்றுத் துறவு கோலம் பூண்டு வெளியேறினர் அன்று முதல் திருவெண்காடர் பட்டினத்தடிகள் என்ற சிறப்புப் பெயர் கொண்டார். உடையின்றி ஊரெலாம் பிக்ஷை ஏற்றுண்டார், புறத்திண்ணை

களில் படுத்துறங்கினர் இது கண்ட உற்ருரும் உறவினரும் ஊராரும் வருந்திமிகக் கவலை அடைந்தார்கள்.

இது கேட்ட அரசனும் பட்டினத்தார் மாளிகை வந்தான் பொருளெலாம் சேந்தனர் சூரையிடுவதையும் பார்த்தான் குடும்பத்திற்கும் தமக்கை, முதலானவர்களுக்கு போஷனைக்கும் வேண்டும் பொருளை ஒதுக்கினர் சேந்தனர். உண்மையை அரசன்உணராது, பொருளிருக்குமிடமெல்லாம் கேட்டான் உண்மை சொல்லியும் நம்பவில்லை அவர் சொந்தப் பொருளையும் கவர்ந்து கொண்டு சேந்தனரையும் சிறைசெய்து விட்டான். பிறகு பட்டினத்தடிகளையும் கண்டு தெரிசித்தான் அவர்சிவயோகத்திலிருந்தார் அரசன் சென்று, அய்யா செல்வமிக்கவெண்காடரே செல்வம் துறந்து இப்படி இருக்கக் கண்ட பலன்யாது ''எனக் கேட்டான்'' நாமிருக்க நீநிற்பதே கண்ட' பலன் என்று அஞ்சாது கூறினர். 'துறவிக்கு வேந்தன் துரும்பு'' என்னும் வாக்கியத்தை அரசன் உணர்ந்து சென்ருன்

## தமக்கையார் நஞ்சூட்டியது.

பட்டினத்தடிகள் பித்தராய்த்திரிபவர் போல் திரிந்தார்குப்பைமேட்டில்படுத்து உறங்குவார் பசி வந்த சமயம் வீடுகளுக்கு முன் வந்து கை தட்டி பிச்சைகையில் கொண்டுவந்து கொடுக்க உண்பார் இது கண்ட தமக்கையார் முதலிய வர்கள் மிகவும் வருந்தினுர்கள். பிச்சை கொடுக்கக் கூடாதென்றும் தடைசெய்தார்கள் மேலும் அடிகளின்உண்மைநிலையைஉணராத தமக்கையார் இவர் இருப்பதைவிட இறப்பதே நலமெனவும் கருதிச் சூழ்ச்சி செய்தார்கள். நஞ்சு கலந்த அப்பம் செய்து சுவாமிகள் பிஷைக்கு வரும்போது 'கொடுத்தாள் சுவாமி கள் கையில் வாங்கினுர்கள். உண்மையை உணர்ந்து 'தன்வினை தன்னைச்சுடும், ஓட்டப்பம் வீட்டைச் சுடும்' என்று கூறி அப்பத்தைக் கூறைமீதெறிந்து சென்ருர்கள் உடனே வீடு தீப்பற்றிக் கொண்டு எறிந்து விட்டது. உண்மைத் துறவியாரின் கோபாக்கினியான தால் நெருப்பை அணைக்க முயன்றும் முடிய வில்லை. பிறகும் சுவாமிகள் ''குடியிருந்த வீடு

கொள்ளிவைக்க வேண்டு மெனச் சொல்லிக் கொண்டு திருவெண்காட்டிலிருந்தார்கள்.

## தாயார் தகனக் கிரியை

சுவாமிகள் இப்படி இருக்கையில் காவிப் பூம்பட்டினத்தில், தாயார் சிவபத மடைந்தார்கள் உறவினர் உயிர் நீங்கிய உடலை முறைப்படி மயானத்திற்கு எடுத்துச் சென்றார்கள். திருவருளால் தாயார் பிரிவு உணர்ந்த அடிகள் வெண்காட்டிலிருந்து விரைவாக ஓடி வந்தார்கள் சுவாமிகளைக் கண்ட உறவினர் ஒதுங்கினார்கள், சுவாமிகள் அன்னைக்குஉறுதி சொல்லியவண்ணம் அருகே போய் அடுக்கி இருந்தவிறகுவிராட்டிகளால் ஆகிய சிதையை அகற்றி, வாழைப்பட்டையால் சிதை அடுக்கி அதன் மேல்அருமைத்தாயார் உடலை வைத்து சிவபெருமானை வேண்டிக்கொண்டார். ''ஐயிரண்டு திங்கள்'' முதலிய பல இரங்கல் பாக்களைப் பாடினார் ''யானுமிட்ட தீ மூழ்க மூழ்கவே என்றதும் ஞானக்கினி பற்றி தாயார் உடல் வெந்து சாம்பலாயிற்று சாம்பலானதும் 'வெந்தாளோ' என்னும் பாடல் பாடினர் மறு

நாள் காலை உறவினரையும் பார்த்தார் ''வீற் றிருந்தாள் அன்னை'' என்னும் பாடல் பாடி னுஞ், சயனம் செய்வித்தார் உடனே ''மென்று விழுங்கி'' என்னும் பாடல் பாடிக்கொண்டே காவிரிப்பூம்பட்டினம் விட்டுத் திருவிடை மருதூருக்குச் சென்றார்.

## தல யாத்திரை

திருவிடைமருதூர் ஆலயமடைந்தார் மகாலிங்கமூர்த்தியை மனமாரக் கைகூப்பி வணங்கினார். திருவிடைமருதூர் மும்மணிக் கோவை என்னும் பொருள் நிறைந்த பாமாலையும் பாடினார் நகர் சுற்றிப் பிக்ஷை வாங்கி உண்டு மகிழ்ந்தார். சில நாள் கோபுர வாயிலில் சிவயோகத்திலிருந்தார் இறைவனும் கனவில் தெரிசனங் கொடுத்தார் தல தெரிசனம் செய்து வரும்படி கட்டளையு மிட்டார் பட்டினத்தடிகளும் உலகுய்யப்பல திருப்பாடல்களைப் பாடிக் கொண்டு தல யாத்திரை செய்தார் கும்பகோணம், கீழ்க் கோட்டம், காரகோணம் நாகேச்சரம் குரங் காடுதுறை மாயூரம் முதலிய தல தெரிசனம் செய்து திருவாரூர் வந்து தெரிசனம் செய்து

கொண்டு பிச்சையேற்றுண்டு வசித்து வந்தார்.

## திருமணம் செய்வித்து உயிர்ப்பித்தது.

திருவாரூரில் ஒரு இளைஞன் சுவாமிகள். உண்மை நிலை உணர்ந்து சுவாமிகளுக்கு காலம் தவருது பிக்ஷை கொடுத்தும், பணி செய்தும், சுவாமிகளிடத்து திருவருள் பெற முயன்ருன். அவனே குடிக்கு ஒரே பிள்ளை அவன் அத்தைக்கும் ஒரே பெண் இருந்தது இருவருக்கும் மணம் செய்வித்து இல்லறம் நடப்பிக்க வேணுமென்று பெற்ருேர்கள் விரும்பினர்கள். இளைஞன் பக்தியில் ஈடுபட்டிருந்தமையால் மறுத்தான் அது கண்ட பெற்ருேர்கள் பட்டினத்தடிகளிடத்தில் குடும்ப நிலை கூறி ''எங்களுக்கு வம்ஸ விருத்தி வேண்டும்'' என்றும் சிறுவனுக்கு எடுத்துச் சொல்லும்படியும் வேண்டினர்கள் வேண்டுதலுக்கு இரங்கினர் அடிகளும் இளைஞனுக்கும் 'அப்பா அநுக்கிரகம் கிடைக்கும் இல்வாழ்வும் உலகத்துக்கு அவசியமானது என்று எடுத்துக் கூறி ஒத்துக்கொள்ளும்படி

செய்தார். இளைஞனும் கல்யாண வீட்டில் ஆசீர்வதிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். அத்தை மகளுக்கும், அம்மான் மகனுக்கும் கல்யாணம் நடந்தது. கல்யாண வீட்டில் அடிகளும் சென்று ''நாப்பிளக்க'' என்னும் பாடல் பாடிச் சென்றார்கள். பிறகு மணமக்கள் மனமொத்த வாழ்க்கையை இன்ப மாக நடத்தினார்கள். இளைஞன் எண்ணை நீராடித்தூங்கினான். அன்றிரவு காமவேட்கை அதிகப்பட்டது. உடனே காதலியைக் கலந்த மகிழ்ந்தான்.

அதனால் சுக சன்னி ஏற்பட்டு மரண மடைந்தான் மனைவி முதல் யாவரும் கதறி அழுது வருந்தினார்கள். அது சமயம் தெய்வச் செயலாய் பட்டினத்தடிகளுக்கு சப்தம் கேட்டு ஆங்கு சென்றார். வருத்தங்கண்டு சகியாது இறந்த இளைஞனைக் கிருபையுடன் பார்த்துப் பாடல் பாடினார். 'வடிவந்தானும்' 'மண்ணு முருகும்' என்னுஞ் செய்யுள் பாடியதும் இளைஞன் உறங்கியவன் விழித்துஎழுந்தமாதிரி எழுந்து திருவடி பணிந்தான் உற்றாரும், ஊராரும் பெருமகிழ்ச்சி அடைந்து போற்றி னார்கள். இளைஞன் சுவாமிகளுக்கு உபசாரம்

செய்து அங்கு இருக்கும்படி வேண்டிக் கொண்டான். உடனே 'எருவாய்க் கிருவிரன் மேல்' என்னும் செய்யுள் பாடி, இளைஞனுக்கு அருள் புரிந்தார். 'வெட்டவெளி' என்னும் பாடல் பாடிக்கொண்டே திரிவாரூர் கடந்தார். தலங்களை தெரிசித்துக் கொண்டு பாண்டியநாடு சென்றார். மதுரைக்கு வந்தார். சோமசுந்தரப் பெருமானைத் தெரிசித்து 'விடப்படுமோ' என்னும் பதிகம் பாடி அந்நாட்டுத் தலங்கள் பணிந்து மலைநாடு சென்று திருவஞ்சைக்களம் பணிந்தார்.

## பட்டினத்தடிகள் கொங்கு நாட்டிலிருந்தது

அடிகள் கொங்கு நாட்டில் பேரையூர், அவிநாசி தெரிசித்தார். மௌன விரதம் கொண்டுஇருந்தார். ஒருநாள்இரவில்பெரும் பசியால் பிச்சைக்குச் செல்ல, மூர்க்கன் ஒருவன் சுவாமிகளை அடித்துவிட பின் அது கண்ட அன்பன் ஒருவன் சகியாது விலக்கி மூர்க்கனையும் தண்டித்து, சுவாமிகளை உபசரித்து உணவு கொடுக்க சிவநாமம்

செய்துகொண்டு உணவுண்டு பசிதீர்ந்தார். தூங்கும்போது "பூனும் பணிக்கல்ல" இருக்கு மிடம்தேடி" என்னும் பதிகங்கள் பாடி துளுவ நாடு சென்றார்.

## துளுவ நாட்டில் கழுமரம் எரித்தது

துளுவ நாட்டில் கோகரணம், உஞ்சேனை மாகானம் தெரிசித்தார். அருகாமையிலுள்ள காட்டுப் பிள்ளையார் கோவிலில் சிவயோகத் திருந்தார். அதுநாள் அந்தநகர்மன்னராம் பத்திரகிரியார் அரண்மனையில் திருடர்கள் நகைகளைத் திருடிக்கொண்டு, காட்டுப் பிள்ளையார் கோவிலுக்கு வந்து கூடினார்கள் பங்கிடும்போது. முதலில் பிராத்தித்துக் கொண்டபடி ஒரு நகையை விநாயகருக்கு சாத்தியவர்கள் இருட்டினால் சிவயோகத்தி லிருந்த பட்டினத்தடிகளை விநாயகராகக்கருதி கழுத்தில் போட்டு விட்டுப் போய் விட்டார்கள் அடிகளும் தன்னை மறந்து சிவயோகந்திலிருந் தார்கள் மறுநாள் அரசன் களவு போய் விட்டது தெரிந்து களவு தேடித் திருடர்களைப்

பிடித்து வர ஏவலாளிகளை அனுப்பினான். தேடிச்சென்றவர்கள், சுவாமிகள் முத்து ஆரத்துடன் யோகத்திலிருப்பதைக் கண்டார்கள். உண்மை உணராது, இவனே திருடன் என்று தூக்கிச் சென்று, அரசன் முன்விட்டார்கள். அரசன் ஆரத்தையும், சுவாமிகள் கோலத்தையும் பார்த்து களவு கொடுத்த வருத்தத்தால் பலர் பலவாறு கூறக்கேட்டான்.

உண்மை உணராது பட்டினத்தடிகளைத் திருடன் என்றே தீர்மானித்து கழுமரத்தில் ஏற்றும்படி கட்டளையிட்டான். கட்டளைப்படி ஏவலாளர்கள் அம்மகானைக் கழுமரத்தடியில் கொண்டுபோய் நிறுத்தினார்கள் சுவாமிகள் சிவ, சிவ என்று சொல்லி கழுமரத்தைப் பார்த்துச் சிரித்தார் ''உன் செயலாவது யாதொன்றுமில்லை'' என்னும் பதிகம் பாடினார். கழுமரம் பற்றி எரிந்து சாம்பலாயிற்று. இது கண்டு திடுக்கிட்டு அரசனுக்குத் தெரிவித்தார்கள் அரசன் கேட்டதும் தன்னை மறந்து பாதசாரியாக ஓடிவந்து பார்த்து ஆச்சரியமுற்றான்.

## பத்திரகிரி மகாராஜாவை ஆட்கொள்ளல்

பட்டினத்தடிகள் பெருமை உணர்ந்த அரசர் பத்திரகிரியார், சுவாமிகள் காலில் விழுந்து மன்னிக்கும்படி பிரார்த்தித்துவணங்கினன். உடனே தானும் அரச கோலம் வெறுத்துத் துறவு பூண்டார். சுவாமிகளை பின் தொடர்ந்தும் சென்றன்- சுவாமிகளும் அரசனுக்குப் பக்குவம் நோக்கி தீக்ஷைசெய்து திருவிடைமருதூருக்குச் செல்லும்படி கட்டளையிட்டார் பத்திரகிரியாரும் வர பட்டினத்தடிகளும் பல தலம் பணிந்து திருவிடைமருதூருக்கு வந்தார். இருவரும் பிக்ஷை ஏற்று உண்டு கீழ்க்கோபுரத்தில் அடிகளும், மேலக் கோபுரத்தில் பத்திரகிரியாரும் தங்கி சிவயோகத்திலிருந்தார்கள். பத்திரகிரியார் பிச்சை உண்டது கண்ட ஒரு நாய் வாலாட்டி வந்தது. நாய் பசியால் வருந்தி வருவது கண்ட பத்திரகிரியார் உண்டு எஞ்சியதை நாய்க்குப் போட்டார். உச்சிட்டம் உண்ட நாய் அன்று முதல் கூடவே இருந்தது. ஒருநாள் ஈஸ்வரன் சோதிப்பான் கருதி சித்தரூபமாகி பட்டினத்

தடிகளிடம் பசி தணிக்கும்படி சோறு கேட்டார். அதற்கு அடிகள் மேலக்கோபுர வாயிலில் குடும்பி இருக்கிறார். அங்கு செல்லுங்கள் என்று சொன்னார். அதன்படி சித்தரும்சென்று பத்திரகிரியாரைக் கேட்க குடும்பி என்ற பதக் குறிப்பால் உணர்ந்து துறவிக்கு நாயும், உண்பதற்கு திருஓடும் வேண்டா மென்று தெளிந்து ஓட்டைஎறிய ஓடு நாய் மண்டையில் பட்டு நாயும் உயிர்துறந்தது.

உயிர் துறந்த நாய் உச்சிட்டமுண்ட நலத்தால் காசியில் அரசனாக இருக்கும். விசுவகுத்தனுக்கு மகளாய்ப் பிறந்தது. நலனெலாம் திகழும் பருவத்தில் அரசன் மணம் செய்ய விரும்ப, மறுத்து 'நான் திருவிடைமருதூர் மேலக்கோபுர வாசலில் சிவயோகம் புரியும் பத்திரகிரியாருக்கு அடிமை. என்னை ஆங்கு அழைத்துச் செல்க' என்று கூறினாள். கூறக்கேட்ட மன்னன் மகளுடன திருவிடைமருதூருக்கு சிவிகையில் வந்து மகளை பத்திரகிரியார் முன் கொணர்ந்து நிறுத்தினான். மகளும் பத்திரகிரியாரைவணங்கி 'அடிநாய் நானே, என்று கூறினாள். உண்மை நிலை

உணர்ந்து அரசன் மகளுடன் பத்திரகிரியார். கீழ்க்கோபுர வாசல் பட்டினத்தடிகள் சந்நிதி வந்தார்கள். வந்து வணங்கி தேவரீர் எச்சல் பிரசாதம் உண்ட நாய்க்கு இப்பிறவி வந்த காரணம் யாதென வினவினர். எல்லாம் சிவன் செயல் என அடிகள் கூறித் திருவருளை பிரார்த்தித்தார். உடனே ஒருஜோதி உண்டாகியது அச் ஜோதியில் பத்திரகிரியார் அப் பெண்ணுடன் பிரவேசித்து ஐக்கிய மானுர்கள். ஜோதி மறைந்ததும் மகாலிங்கத் தில் சேர்ந்தார், அது கண்ட பட்டினத்தடிகள் நடுங்கித் திருவருளை வியந்து மகாலிங்கப் பெருமானையும் வணங்கினர். வணங்கி நிறை அடிகளுக்கு ''திருவொற்றியூருக்கு வருக'' என்று அசரீரி கூறியது. அதன்படி புறப்பட்டு திருவெண்காடு வந்தார்

## சேந்தனரை சிறை நீக்கியது

பட்டினத்தடிகள் திருவெண்காடு வந்ததும் சேந்தனர் மனைவி, மக்கள். சுவாமிகள் காலில் விழுந்து வணங்கினர்கள், யார் என வினவ. சேந்தனர் மனைவி மக்கள் அவரை சிறை நீக்கும்படி வேண்டுகிருர்கள் என்று

தெரிந்துகொண்டார். உடனே சிவ ந்நிதி அடைந்து

**மத்தளை தயிருண்டானு மலர்மிசை**
**மன்னி னும்**
**நித்தமுந் தேடிக்காணு நிமலனே நீ**
**யின்றேசிச் செய்த்தனை கயல்பாய்**
**நாங்கூர் சேந்தனை வேந்தனிட்ட**
**கைத்தனை நீக்கி யென்முன் வெண்காட்**
**டுளானே**

என்னும் பதிகம் பாடினர். சிவபெரும ன் விநாயகமூர்த்தியை அனுப்பி, அரசன்சிறை யிலிருந்த சேந்தனை வெளிப்படுத்திக் கொண்டு வரச் செய்தார். சிறை நீங்கி பட்டினத்தடிகள் பாதம் பணிந்த சேந்தனை மனைவி மக்களுடன் சிதம்பரம் சென்று விறகு விற்று பசி தீர்ந்து வாழும்படி கட்டளை யிட்டுத் தானும் சீர்காழி வழியாக சிதம்பரம் வருகின்றார். சீர்காழியில் திருக்கழுமலமும் மணிக்கோவை பாடிப் பணிந்தார். பிறகு சிதம்பரம் வந்தார் ஆராத காதலுடன் நடராஜப் பெருமான் நடனம் தெரிசித்தார். கோயினுன் மனிமாலை பாடினர். பசியால் வருந்தி இருக்க 'பன்னுக வாடகப் பொற் பாதம் பாட, சிவகாமி அம்மையார் உச்சிக்

கால மகா நைவேத்தியம் கொண்டு வந்து கொடுத்து மறைந்ததும் அம்மை சிவகாமியே என உணர்ந்து கசிந்து உருகி 'ஓடுமெடுத்து' ''சோறிடு நாடு'' என்று பதிகம் பாடினார். முடிவாக ''நினைமின் மனனே''என்னும் அகவலும் பாடி தலயாத்திரைக்குப் புறப்பட்டார்.

பல தலம் பணிந்து திருவேகம்பம் தெரிசித்து திருவந்தாதி திருவகவல் பாடினார். பிறகு அங்கிருந்து புறப்பட்டு பல தலங்களும் பணிந்து தியாகேசன் உறையும் திருவொற்றியூர் வந்து சேர்ந்தார்.

## பட்டினத்தடிகள் திருவொற்றியூரில் சிவசாயுச்சியமடைதல்

திருவொற்றியூர் எல்லையில் பிரவேசித்ததும் தம்மை மறந்து உண்டான பேரின்பத்தால் ''ஓடு விழுந்து'' என்னும் வெண்பா ஓதினார். ''கிடப்படுவார்'' என்னும் செய்யுளாற்றுதித்து திருவீதியில் அங்கப்பிரதக்ஷணம் செய்து சந்நிதி அடைந்து வணங்கி, அருள் பெற்றார். பலநாள் இருந்து திருவொற்றியூர்ஒருபாவொருபஃது ''ஐயிந்தொடர்ந்து.

முதல்வன் முறையீடு. அருட்புலம்பல் முதலிய பாடி. அருள் வேண்டி நின்ருர். பல நாள் பசு மேய்க்கும் சிறுபிள்ளைகளுடன் விளையாடுவார். ஒருநாள் ஒரு குழியில் தன்னைப்புதைக்கும்படி சிறுவர்களுக்குச் சொல்ல சிறுவர்களும் இது போல்செய்ய, புதைக்கப்பட்டவர் வெளிவந்து விட்டார். சிறுவர்கள் ஆச்சரியமுற்ருர்கள். முடிவாக ஒருநாள் கடற்கரையில் சிறுவர்களுடன் விளையாடும்போது மணல் குவியல் செய்து தன்னை மறைக்கும்படி செய்து, அதில் நின்றும் வெளிவராது சிவலிங்க ரூபமாய்த் திகழ்ந்து விளங்கினர். இதுகண்ட சிறுவர்கள் ஆச்சரியமுற்று ஊராருக்கு உணர்த்தினுர்கள். அனைவரும் வந்து பார்த்து மகிழ்ந்தார்கள். உண்மைத் துறவிபட்டினத்தடிகள் தமது உடல் மறைத்துச் சிவமாம் தன்மை பெற்ருர் என்று வாழ்த்தி வணங்கினுர்கள். மனைவியார் சிவகலை அம்மையாரும் அடிகள் திருவடி மறவாத சிந்தையுடன் சிவபதமடைந்தார். சேந்தனுரும் சிதம்பர தலத்தில் அற்புதம் புரிந்து முத்தி அடைந்தார். பட்டினத்தடிகள் திருவொற்றியூரில் ஆடி உத்தி

ராட நாளில் சிவசாயுச்சிய. பதவி பெற்று சிவலிங்க ரூபமாய் விளங்கும் மேன்மை கேட்டுக் காவிரிப்பூம்பட்டினத்தாரும் எற்று முன்னோரும் வந்து வணங்கி வாழ்வு பெற்ருர்கள்.

செல்வப் பட்டினத்தடிகள் சீரடி வாழ்க
பட்டினத்தடிகள் சரிதம் முற்றுப்பெற்றது.

## குரு பூஜை நாள்
## நேரிசை வெண்பா

மண்ணுசை பொன்னுசை மாதரசை நீத்தருளே
உண்ணுடி யொற்றியுயர் பதியில் பண்ணுது
நாடிலிங்கமாகப் பட்டினத்தடிகளான
தினம் ஆடியுத்தராட நாளாம்

இத்தகைய சிவமாம் தன்மை பெற்ற பெரு வாழ்வுடைய பட்டின சாமியார் மரபே இன்றும் நமது இளையாற்றக்குடிக் கோவி லில் பட்டின சாமியார் வகுப்பு என விளங்கு வது திருவெண்காடர் நம் மரபினர் என்ப

தற்கு முக்கிய சான்ருகும். மேலும் பட்டினத்தடிகள் வாழ்க்கை விளக்கமாக அற்புதத் திருவிழாவைக் காவிரிப்பூம்பட்டினம் பல்லவனீச்சரத்தில் ஒவ்வொரு வருஷமும் ஆடி மாதத்தில் நம்தனவணிக நாட்டுக்கோட்டை நககரத்தாரே சிறப்புறச் செய்வதும் மிகப் பொருத்தமாக இருக்கிறது

உ

சிவமயம்

## பட்டினத்தார் பாடல்

பூமேலயனறியா கோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம் பாமேவு
மேத்துகந்தான் றில்லேயிடத்து கந்தானம்
பலத் கூத்துகந்தான் கொற்றக்குடை (தே

சல்லாப்பிழையும் கருத்தாப்பிழையும் கசிந்துருகி, நில்லாப்பிழையு நினையாப்பிழை நின்னஞ்செழுத்தைச்சொல்லாப்பிழையுந் துதியாப் பிழையுந் தொழாப்பிழையுமெல்லாப்பிழையும் பொருத்தருள்வாய் கச்சியேகம்பனே. 2

ஊருஞ்சதமல்ல, வுற்றார்சதமல்ல, உற்றுப் பெற்ற பெருஞ்சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளுஞ், சீருஞ்சதமல்ல செல்வஞ்சதமல்ல தேசத்திலேயாருஞ்சதமல்ல நின்றாள்சதங்கச்சி யேகம்பனே. 3

பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவார் பூவையன்னு. டன்னைநினைந்து வெகுவயுருகு வார் தாரண்யி லுன்னை நினைந்திங்குனைப் பூசியாத வுலுத்தரெல்லா மென்னையிருந்து கண்டா யிறைவாகச்சி யேகம்பனே 4

கொல்லாமற் கொன்றதைத் தின்னுமற்குத் திரங்கோள்களவுகல்லாமற் கைதவரோடிணங் காமற் கனவிலும்பொய் சொல்லாமற் சொற் களைக் கேளாமற்றேகையா மாயையிலே செல் லாமற்செல்வந்தருவாய் சிதம்பர தேசிகனே 5

பிறவாதிருக்க வரந்தரல் வேண்டும் பிறந்து விட்டா லிறவாதிருக்க மருந்துண்டு காணிது வெப்படியோ, வறமார் புகழ்த்தில்லையம் பல வாண ரடிக்கமல, மறவாதிருமனமேயதுகாண மருந்துனக்கே 6

காடேதிரிந்தென்ன காற்றேபுசித் தென்னகந் தைசுற்றி, யோடேயெடுத்தென்ன வுள்ளன் பிலா தவரோங் குவிண்ணே, நாடேயிடை மருதீசர்க்கு மெய்யன்பர் நாரியாபால், வீடே யிடுப்பினுமெஞ் ஞான விட்டின்ப மேவுவரே 7

தாயும் பகைகொண்ட பெண்டீர் பெரும் பகை தன்னுடைய, சேயும்பகையுற வோரும் பகையிச்சேகமும்பகை, யாயும்பொழுதி லருஞ் செல்வநீங்கிலிங் காதலினாற், ரேயுநெஞ்சே மருதீசர் பொற்பாதஞ் சுதந்தரமே. 8

நீருர்த்த மேனியு ரோமஞ்சிலிர்த்துளநெக்கு நெக்குச். சேருய்க் கசிந்து கசிந்தேயுருகிநின் சீரடிக்கே, மாருத்தியான முற்றுனந்த மேற் கொண்டு மார்பிற் கண்ணீராருய்ப் பெருகக் கிடப்பதென்றே கயிலாயத்தனே. 9

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நொக்க கசிந்துருகிப்; பண்ணுண்டுபாடச் செவியுண்டு கேட்கப் பல்பச்சிலையா, லெண் ணுண்டு சாத்த வெதிர்நிற்கவீச னிருக்கை யிலே, மண்ணுண்டு போகுதையோ கெடு வீரிந்த மானுடமே. 10

அடியாருறவு மரன்பூஜை, நேசமு மன்பு மன்றிப், படிமீதில்வேறு பயனுளதே டங் கயன் வகுத்த குடியானசுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள், தடியாலடியுண்ட வாரெருக்கு மென்றினஞ் சார்ந்திலரே. 11

வட்டிலிலுந் தொட்டிலு மார்மேலுந் தோண் மேலுங், கட்டிலிலும் வைத்தென்னைக் காத லித்து முட்டச் சிரகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந் தாய்க்கோ விரகிலிட்டுத் தீ மூட்டு வேன். 12

பொய்யையொழியாய்புலாலை விடாய்காளத்தி
ஐயனேயென்று யறஞ்செய்யாய்—வெய்ய,
சினமேயொழியாய்திருவெழுத்தைந்தோதாய்
மனமே யுனக்கென்ன மாண்பு. 13

கண்டங் காரியதாங் கண்மூன் றுடையதா
மண்டலத்தைப்போலே வழங்கியதாந்-
தொண்ட ருடலுருகத்தித்திக்கு மோங்குபுக
ழொற்றிக் கடலருகே நிற்குங்கரும்பு. 14

வாவியெல்லாந்தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு, காவனங்களெல்லாங்கணநாதர்பூவுலகி லீதுசிவலோகமென்றென்றேமெய்த்தவத்தோ ரோதும் திருவொற்றியூர்.

## தாயுமான சுவாமிகள்

ஒட்டுடன் பற்றின்றி உலகத்தைத் துறந்த செல்வ பட்டினத்தார் பத்திரகிரி கண்புணர்வ தெந்நாளோ.

பட்டினத்தடிகள் திருவடி வாழ்க.



